MR. CHAIRMAN : The question is—

'That the Madras Buildings (Lease and Rent Control) Amendment Bill, 1960 (L.A. Bill No. 1 of 1960), as passed by the Legislative Assembly, be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 and 1 and the Preamble were put and carried.

THE HON. SRI V. RAMAIAH : Mr. Chairman, Sir, I move—

That the Madras Buildings (Lease and Rent Control) Amendment Bill, 1960 (L.A. Bill No. 1 of 1960), as passed by the Legislative Assembly, be passed.'

MR. CHAIRMAN : The question is—

'That the Madras Buildings (Lease and Rent Control) Amendment Bill, 1960 (L.A. Bill No. 1 of 1960), as passed by the Legislative Assembly, be passed.'

The motion was put and carried and the Bill was passed.

## IV GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1960-61—*cont.*

MR. CHAIRMAN : Now, we will continue the general discussion on the Budget for the year 1960–61.

3.40 p.m. * SRI G. KRISHNAMOORTHY: *கனம் தலைவர் அவர்களே, இந்த வரவு செலவுத் திட்டம் ஆசிரியர்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்திருக்கிறது. ஆசிரியர்களுடைய ஊதிய உயர்வையும், அவர்களுக்குள் இருக்கும் சலுகைகளில் உள்ள வேறுபாடுகளை அகற்றவும், வேண்டிய நிதியை இந்த வரவு செலவுத் திட்டத்தின் மூலம் சர்க்கார் ஒதுக்குவார்கள் என்று எண்ணினார்கள். ஆனால், அது ஏமாற்றத்தைத்தான் கொடுத்திருக்கிறது. சமீப காலத்திற்குள்ளாகச் சம்பளக் கமிஷன் ரிப்போர்ட் வெளி வரும் என்று சொல்வதானது ஒருவிதத்தில் கொஞ்சம் நம்பிக்கையை ஊட்டியிருக்கிறது. அதன் மூலமாகவாவது சர்க்கார் ஆசிரியர்களுக்குச் செய்யவேண்டிய நியாயத்தைச் செய்வார்கள் என்று ஆசிரியர்கள் எதிர்பார்க்கின்றார்கள்.*

*அதிகப்படியாக, நான் ஆசிரியர்களைப்பற்றியே பேசிக்கொண்டிருக்கிறேன் என்ற ஒரு எண்ணமானது பல பேர்கள் கொண்டிருக்கலாம். ஆனால், நான் கனம் மெம்பர்களுக்குச் சொல்ல வேண்டியது முக்கியமாக என்னவென்றால், இன்றையதினம் சர்க்கார் குறைந்தபட்சச் சம்பளமாக ஒரு ஆசிரியர் என்று சொல்லக்கூடிய ஆரம்ப ஆசிரியருக்கு 66 ரூபாய் கொடுத்தார்களானால், அந்த 66 ரூபாயானது, இப்பொழுதிருக்கும் புள்ளி விவரங்களின்படி, பழைய 13 ரூபாய்க்குத்தான் சமானம். ஆசிரியர்கள் எந்த நிலையில் 1947-க்கு முன்பாக இருந்தார்களோ அதே நிலையில்தான் இன்றைக்கும் இருந்து வருகிறார்கள். வரவு செலவுத் திட்டத்தைப் பார்த்தால்,*

21st March 1960] [Sri G. Krishnamoorthy]

ஒவ்வொரு வருஷத்திலும் கல்வி மான்யத்தில் 1¼ கோடி, 1½ கோடி ரூபாய் அதிகப்படியாகக் கொடுத்து வந்திருக்கிறார்கள். இந்த வருஷம் மட்டும் 15 கோடி ரூபாய் செலவழித்தால் கூட, சென்ற வருஷத்திற்கும் இந்த வருஷத்திற்கும் முக்கால் கோடி ரூபாய்தான் உபரியாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால், கல்வியிலே வருவாயைப் பார்த்தால், 2¾ கோடி ரூபாய் வருவாய் இருக்கிறது. ஆக, 12 கோடி சொச்சம் ரூபாய்தான் உண்மையாகச் செலவழிக்கிறார்கள். ஒவ்வொரு வருஷமும் 'ரிக்கரிங் இன்கம்' யிலிருந்து இது நமக்கு இப்பொழுது நன்றாக ஏறியிருக்கும் வருவாயாகிய 80 கோடி ரூபாயில் பார்த்தால், 15 சதவிகிதம்தான் ஆகிறது. 20 சதவிகிதம் சாதாரணமாகச் செலவழிக்கக்கூடிய சர்க்கார், ஏன் இப்பொழுது 15 சதவிகிதத்திற்கு அந்தக் கல்விச் செலவைக் கொண்டுவந்தார்கள் என்பது புரியவில்லை.

அடுத்தபடியாக, ஆசிரியர்கள் கேட்பதெல்லாம் வாழ்க்கைத் தரத்திற்குப் போதவில்லை என்று கேட்கிறார்களே தவிர, அவர்கள் ஏதோ ஒரு கிளர்ச்சி செய்தாலோ அல்லது அவர்களுடைய பிரதிநிதிகள் அதைப்பற்றி அதிகமாகப் பொது மேடைகளிலேயும், சட்ட சபைகளிலும் எடுத்துச் சொன்னாலோ, அதைச் சர்க்காரும் மற்ற மெம்பர்களும், மற்றத் தொழில்களில் இருப்பவர்களைப் போல் என்னாமல் இவர்கள் கேட்பது சமூகத்திற்கு முக்கியமான கடமையாகிய கல்வியை அபிவிருத்தி செய்வதற்காக, ஒரு ராஜாங்கக் கட்சியையும் சேராமல் இருந்துக்கொண்டே, தங்கள் முன் பரமாத்மாக்களாக உட்கார்ந்துகொண்டிருக்கும் குழந்தைகளை எந்த எந்தத் தொழிலில் எந்த எந்தக் குடும்பத்தில் வாழ்க்கை நடத்துகிறார்களோ அந்த அந்தத் தொழிலிலே அவர்களை ஒருவித முன்னேற்றத்திற்குக் கொண்டுவருவதற்காக, முழு கவனத்துடன் பாடு படுவதற்காகத்தான் கேட்கிறார்களே தவிர, ஏதோ ஒரு தொழிற் சங்கத்தைப் போல் அவர்கள் ஊர்வலம் போகிறார்கள், கிளர்ச்சி செய்கிறார்கள் என்ற எண்ணத்தை சர்க்கார் கட்டாயம் தங்களுடைய மனதிலிருந்து அகற்றிக்கொள்ள வேண்டும். அதிகமாக இந்தக் கல்விக்கு நம்முடைய இராச்சிய சர்க்காரும், மத்திய சர்க்காரும் பணம் ஒதுக்கியிருக்க வேண்டும். இன்றைய தினச் செய்தித்தாள்களைப் பார்த்தால் மத்திய சர்க்கார் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சாதாரணமாக ஐந்து சதவிகிதம் கல்விக்காக ஒதுக்கிக்கொண்டு வந்ததை 5.9 சதவிகிதத்திற்குக் கொண்டு வரலாம், அதற்காகப் பாடுபடுவோம் என்று போடப்பட்டிருக்கிறது. நம்முடைய இராச்சிய பட்ஜெட்டில் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சாதாரணமாக 180 கோடி ரூபாயில் அவர்கள் 11 கோடி ரூபாய்தான் செலவழித்துவந்திருக்கிறார்கள். இந்த 180 கோடியில் 11 கோடிதான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செலவழித்து வந்திருக்கிறோம். அதைப் பார்த்தால், 6 சதவிகிதம்தான் கல்விக்காக இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செலவழித்திருக்கிறார்கள். சாதாரணமாக இருபது சதவிகிதம் செலவழிக்கலாம் கல்விக்காக என்ற உத்தேசம்

கொண்டு, இந்த சர்க்கார் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட 180 கோடியிலே ஏன் 20 சத விகிதம் செலவழிக்கக் கூடாது? அப்படிச் செலவழிக்கும்போது, 5 முதல் 6 சத விகிதம் வரை நம்முடைய இராச்சிய சர்க்கார் செலவழிக்கிறார்களே, அதையும் புதிது புதிதாகக் கட்டிடம் கட்டுவதற்கும், பட்டினிப் பட்டாளத்தில் அதிகப்படியாகப் புது ஆசிரியர்களைச் சேர்க்கவும், ஆசிரியர்களைக் கண்காணிப்பதற்காக டெபுடி இன்ஸ்பெக்டர்களை நியமிப்பதற்கும் செலவழித்து வருகிறார்களே தவிர, ஆசிரியர்களுடைய நிலையை உயர்த்துவதற்காக அவர்கள் செலவழிக்காதது மிகவும் வருந்தத்தக்கது. ஆயிரக்கணக்கான, கோடி ரூபாயை மத்திய சர்க்கார், இராச்சிய சர்க்கார் நாட்டின் முன்னேற்றத்திற்காகச் செலவழிக்கும் இந்த நேரத்தில், ஆசிரியர்களின் சம்பளம் வாழ்க்கைக்குப் போதியவாறு செய்யப்படாவிட்டால், இந்த ஆசிரியர்களுடைய நிலையை எந்தக் காலத்தில் தான் இந்த சர்க்கார் உயர்த்த முடியும்? இப்பொழுது ஆசிரியர்கள் கிளர்ச்சி செய்து கேட்காமல் இருந்துவிட்டால், தங்களுக்கு மட்டுமல்ல, வருங்கால சமூகத்திற்கு மட்டுமல்ல, வருங்கால ஆசிரியர் சமூகத்திற்கு மட்டுமல்ல, வருங்கால தேசத்திற்கே துரோகம் செய்தவர்கள் ஆவோம் என்ற எண்ணத்தில் ஆசிரியர்கள் கிளர்ச்சி செய்கிறார்களே தவிர, அவர்களுடைய உடலில் உயிர் இருப்பதற்காக அவர்கள் மற்றத் தொழிலிலே உள்ளவர்கள் போல் கிளர்ச்சி செய்யவில்லை என்பதை சர்க்கார் தெரிந்துகொள்ளவேண்டும்.

முக்கியமாக, சுயராஜ்யம் வந்து 13 வருஷ காலம் ஆய், தேசபிதா மகாத்மா காந்தியடிகளின் அடிச் சுவட்டில் நடக்கக்கூடிய இந்தக் காங்கிரஸ் சர்க்கார் ஏன் ஆசிரியர்களை மார்க்கண்டேயர் போல் என்றைக்கும் இதே நிலையில் வைத்திருக்கிறது என்பது தான் கேள்வி. ஒரேவிதமான படிப்புப் படித்து, ஒரேவிதமான பயிற்சியைப் பெற்று, ஒரேவிதமான இந்தியக் குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்து, ஒரேவிதமான தம் அரசாங்கக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு, ஒரே பாடத் திட்டத்தை அநுசரிக்கும்படியான ஆசிரியர்களை ஏன் இந்த மதச்சார்பற்ற சர்க்காரில் ஐந்துவித ஜாதியாராகப் பிரித்து, சிலருக்கு மட்டும் சில சலுகைகளைக் கொடுக்காமல் பாகுபாடு செய்ய வேண்டும்? ஏன் எல்லோரையும் ஒரேவிதமாகப் பாவிக்கக்கூடாது? என்றைக்காவது ஏதாவது நிவாரணம் கிடைக்குமா என்ற சந்தேகத்தில் இருக்கும் நிலை ஆசிரியர்களுக்கு ஏன் ஏற்படவேண்டும்? இதுதான் கேள்வி. இப்பொழுது சர்க்கார் பள்ளி ஆசிரியர்கள் மாற்றப்படுவதால் அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் நியாயம் பேசினால், மாற்றப்படும்போது அவர்களுக்குத் தனிச் சலுகைகள், பிரயாணப்படி, இரண்டு மடங்கு, மூன்று மடங்கு கொடுத்தாலும் சரி, ஆசிரியர்கள் ஒரேவிதப் பயிற்சி பெற்று அவர்களுக்கு ஒரேவித யோக்கியதாம்சங்கள் இருக்கும்போது ஏன் எல்லா நிர்வாக ஆசிரியர்களுக்கும் ஒரேவிதச் சம்பளம் கொடுக்கக் கூடாது? அப்படிக் கேட்பது நியாயமானது என்று சர்க்கார் ஒத்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

21st March 1960 [Sri G. Krishnamoorthy]

அடுத்தபடியாக, ஒரு லட்சம் பத்தாயிரம் ஆசிரியர்களில் 50 ஆயிரம் ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகைப்படியும் மெடிகல் கன்ஸெஷனும் கிடைக்காமலிருப்பதற்கு என்ன காரணம்? ஆயிரம் பேர்கள் செக்ரடேரியட்டிற்கு செப்டம்பர் 5-ம் தேதி ஊர் வலமாக வந்தோம். இரண்டு ஆயிரத்து இறுநூற்று அருபத்தாறு ஆசிரியர்கள் கையெழுத்திட்ட மகஜர் இந்தச் சர்க்காருக்கு 'பைண்டு' பண்ணி, ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பியிருந்தோம். அதை சர்க்காரும் வாங்கிக்கொண்டிருக்கிறது. அவர்களுக்கு ஏன் இன்னும் வீட்டு வாடகை அலவன்ஸ் கொடுக்கப்படவில்லை என்பது தான் கேள்வி. ஐம்பது ஆயிரம் பேர்களுக்குக் கொடுத்துவிட்டு பாக்கி 60 ஆயிரம் பேர்கள் ஏன் அந்தச் சலுகையை அனுபவிக்கக் கூடாது? வீட்டு வாடகை அலவன்ஸ் நகரத்தில் உள்ளவர்கள் தான் அனுபவிக்கிறார்கள் என்றால், 50 ஆயிரம் பேர்களில் ஒரு பகுதி அனுபவிக்க எந்த விதி அனுமதித்ததோ அதே விதி பாக்கி 60 ஆயிரம் பேர்களிலுள்ள ஒரு பகுதி அனுபவிக்க அனுமதிக்கக் கூடாது? அந்தச் சலுகையை மற்றவர்களும் அனுபவிக்கச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

லோகல் போர்டு, முனிசிபாலிடிகளிலுள்ள ஆசிரியர்கள் வைத்தியச் சலுகையைக் கொடுத்துவிட்டு எய்டெட் பள்ளியிலுள்ள ஆசிரியர்கள் அனுபவிக்க முடியாமல் ஏன் அவர்கள் பிரித்து வைக்கப்பட வேண்டும்? பென்ஷன் கொடுக்க வேண்டுமென்றதில், பி.டி. ஆசிரியர்களுக்கு மாத்திரம் வருஷத்திற்கு ஒரு ரூபாய்தான் பென்ஷன்; மற்றவர்களுக்கு எல்லாம் கடைசி மூன்று வருஷ சர்விசினுடைய ஆவரேஜ் சம்பளத்தில் கால் பென்ஷன் உண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது. பி.ஏ., எல்.டி. பாஸ் செய்த ஆசிரியர்கள் முதல் கிரேடு பண்டிதர் சம்பளம் வாங்கக்கூடிய ஆசிரியர்கள் என்ன பாபம் செய்தார்கள் என்பதுதான் கேள்வி. நாலு டிஜிட் தொகை சம்பளமாக வாங்கும் சர்க்கார் உத்யோகஸ்தர்களுக்குப் பென்ஷன் கொடுக்கவில்லையா? இவர்கள் 150, 200 ரூபாய்க்கு மேலே வாங்கப்போவதில்லை. கால் பென்ஷன் என்றால் 45—50 ரூபாய் ஆகும். சர்க்கார் வேலை பார்த்த ப்யூனுக்கும் பென்ஷன் காலத்தில் 6 ரூபாய் கிராக்கிப் படி கொடுக்கப்படுகிறது. நூறு ரூபாய்க்கு உட்பட்டு பென்ஷன் வாங்கும் எல்லோருக்கும் இந்த விதி உண்டு. ஆசிரியருக்கு அந்தக் கிராக்கிப்படி இல்லை என்றால், அவர்கள் என்ன பாபம் பண்ணினார்கள்?

கன்யாகுமரி ஜில்லாவை எடுத்துக்கொண்டால், 40 மாத காலமாக அங்குள்ள ஆசிரியர்கள் திரிசங்கு சொர்க்கத்தில் வைக்கப் பட்டிருக்கிறார்கள். 1—11—1956-ல் கன்யாகுமரி ஜில்லா நம்முடைய இராச்சியத்தில் சேர்ந்தது. நாற்பது நாள் பத்தியம் என்று சொல்வார்கள். நாற்பது மாதப் பத்தியத்தில் அங்குள்ள ஆசிரியர்கள் வைக்கப்பட்டிருக்கிறார்கள். பி.டி. ஆசிரியர்கள் 85 ரூபாய் வாங்குவதற்குப் பதிலாக 55 ரூபாய்தான் வாங்குகிறார்கள். அவர்கள் கிரேடு 55 ரூபாயிலிருந்து 150 ரூபாயாகத்தான் இருக் கிறது செகண்டரி கிரேடு ஆசிரியர்கள், 45—90 ரூபாய்

கிரேடில் வாங்கவேண்டியவர்கள் 35—80 ரூபாய் வாங்குகிருர்கள். இவர்களுக்கு நாற்பது மாதங்களுக்கும் கணக்குப் போட்டுப் பார்த்தால், பி.டி. ஆசிரியர்களுக்கு 1,200 ரூபாய் வீதம் சர்க்கார் கொடுத்திருக்க வேண்டும். கேரள சர்க்காரில் அவர்கள் இருந்திருந்தால், அவர்களுடைய சம்பளம் உயர்ந்திருக்கும். சென்னை சர்க்காரில் வந்தும் சென்னைச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. ஆகையால், அவர்கள் திரிசங்கு சொர்க்க நிலையில் வைக்கப்பட்டிருக்கிருர்கள். அவர்கள் நிலையைக் கவனிக்க வேண்டும். சமீப காலத்தில், நமது
3-50 p.m. சர்க்கார், கன்யாகுமரி ஜில்லாவில் சர்க்கார் ஆசிரியர்களுக்கு, 1—11—1956-க்குப் பின் புதிதாக உத்தியோகத்திற்கு வந்தவர்களுக்கு, ரூ. 85-ல் ஆரம்பிக்கலாம் என்று உத்தரவு போட்டிருக்கிருர்கள். ஆனல், அந்தத் தேதிக்கு முன் வேலையிலிருந்த ஆசிரியர்களுக்கு என்ன கதி? கன்யாகுமரி ஜில்லாவில் ஒரு விசேஷ அம்சம் என்னவென்ருல், சர்க்கார் ஆசிரியர்களுக்கும், ப்ரைவேட் ஆசிரியர்களுக்கும் வித்தியாசம் கிடையாது. என்பது. அது ஒரு சிறந்த அம்சம். அதே திட்டத்தை மற்ற ஜில்லாக்களிலும் அமல் நடத்தினல் ரொம்ப நலமாக இருக்கும். இப்பொழுது 40 மாத காலமாக அவர்களுக்குச் சென்னைச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. பல கூட்டங்கள் போட்டு இதை அவர்கள் எடுத்துக் கூறியும் ஒன்றும் செய்யப்படவில்லை. கல்வி இலாகா இயக்குனரும் ஒரு கூட்டத்திற்கு வந்திருந்தார்கள். ஆனல், நிலைமை அப்படியே இருக்கிறது. நம் இராச்சியத்தைச் சேர்ந்தும், ப்ரைவேட் ஸ்கூல் ஆசிரியர்களுக்கு இன்னும் பென்ஷன் விதிகள் அமுலுக்கு வரவில்லை.

1—6—1959 முதல் நம் இராச்சியத்தில் எய்டெட் ஆரம்பப் பள்ளிகளில் சம்பளம் விதிக்காத பள்ளிகள் என்றும், சம்பளம் விதிக்கும் பள்ளிகள் என்றும் ஏற்பட்டன. இந்தச் சட்ட சபையிலேயே அம்மாதிரிச் சம்பளம் விதிக்கும் பிரைவேட் மானேஜ்மென்ட் பள்ளிகளிலிருந்து வெளியேற்றப்படும் உபாத்தியாயர்கள் கார்ப்பரேஷன் பள்ளிகளில் வைக்கப்படுவார்கள் என்று கனம் கல்வி மந்திரி அவர்கள் உறுதி கொடுத்தார்கள். அப்படி ஏற்பட்ட நிலையில், 208 ஆசிரியர்கள் ஒரு மாதம் முதல் மூன்று மாதகாலம் வேலையில்லாமல் இருந்தார்கள். அந்தக் காலத்துக்கு அவர்களுக்குச் சம்பளம் கிடைக்கவில்லை. அது அவர்கள் தவறில்லை. அந்தக் காலத்தில் அவர்கள் கடன் வாங்கிக் காலட்சேபம் செய்திருக்கிருர்கள். அந்த வகைக்காக ஒதுக்கப்பட்ட பணத்தைக் கிராண்டாகக் கொடுத்திருக்க வேண்டும். அந்த மூன்று மாத காலத்திற்கு அவர்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டியது சர்க்காரின் கடமை; அது தர்மம். பிரைவேட் மானேஜ்மென்ட் எலிமென்டரி பள்ளிகளுக்காக ஒதுக்கப்பட்ட தொகையில் ரூ. 40,000 மிச்சப்பட்டிருக்கிறது. அது இவர்களுக்குச் சம்பளம் கொடுக்காத வகையில் ஏற்பட்ட மிச்சம் என்றே நான் நினைக்கிறேன். அதே போல் எய்டெட் எலிமென்டரி பள்ளிகளைப் பொறுத்த வரையிலும், ரூ. 1,43,000 மிச்சப்பட்டிருக்கிறது. "சம்பள வசூலை நிறுத்தும் ஆரம்பப் பள்ளிகளுக்கு 1—6—1959 முதல் 15 பர்சண்ட் கிராண்ட்

21st March 1960] [Sri G. Krishnamoorthy]

கொடுப்போம், அதிகப்படி செலவானுல், அப்பொழுது கல்வி இலாகா இயக்குனர் அவர்கள் பார்த்து, 20 பர்செண்ட் கொடுப் பார்கள்" என்று சர்க்கார் கூறியிருந்தார்கள். ஆனுல், கிராண்ட் கொடுக்கும்போது, சாதாரணமாக ஜனவரி 1959 முதல் மே மாதம் முடிய என்ன காம்பென்ஸேஷன் வாங்கினுர்களோ, அதை ஒரு பக்கம் போட்டு, மறு பக்கம் 1—6—1959 முதல் 31—12—1959 வரையில் 15 பர்செண்ட் அளவாகப் போட்டு, வித்தியாசத்தை 25 பைசா கிராண்டாகக் கூட ஒரு பள்ளிக்குக் கொடுத்திருக்கிருர்கள். இப்படித் திடீரென்று செய்திருப்பது சர்க்கார் கொடுத்த உறுதிக்கு விரோதமானது. அவர்கள் சொன்னது சாதாரணமாக 15 பர்செண்ட் என்றும், அதிகம் செலவாகியிருந்தால், 20 பர்செண்ட் என்றும் சொன்னுர்கள். இப்பொழுது என்ன ஆகிறது? மானேஜ் மெண்டுகள் 7 மாதத்தில் செலவழித்திருக்கும் தொகைக்குக் கிராண்ட் கொடுக்கமாட்டேன் என்கிருர்கள். அதனுல் ஒரு அவசர நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதை சர்க்கார் உடனடியாகக் கவனிக்க வேண்டும். சர்க்கார் கல்லூரி ஆசிரியர்களுக்கு affiliated கல்லூரிகள் சிலவற்றிலுள்ள சம்பளம் கிடைக்கவில்லை. University Grants கமிஷன் கொடுத்து எல்லாக் கல்லூரி ஆசிரியர்களின் சம்பளமும் உயரும்படி சர்க்கார் செய்யவேண்டும்.

ஆசிரியர்கள் எங்கிருந்தாலும் ஒருமாதிரியானவர்களே, ஒன்று தான். ஆரம்பபள்ளி ஆசிரியர் முதல் கல்லூரி ஆசிரியர் வரை ஒரே சங்கமாக ஏற்படுத்தி நடத்தி வருகிறோம், கல்லூரிகளில் இருந் தாலும், மற்று எங்கிருந்தாலும் சரி. ஆகவே, அவர்கள் எல்லோ ருக்கும் பென்ஷன் வசதி குழந்தைகளுக்கு கல்வி வசதி, இவை களைச் செய்து கொடுக்க வேண்டும். ஆசிரியர்கள் கேட்பதெல் லாம், பங்களாக்களோ, மோட்டார்களோ அல்ல. அவர்கள் கேட்ப தெல்லாம், 'க்ரீச்சர் காம்பர்ட்ஸ்'—உணவு, உடை, தங்க போதிய இடம். 'டெவலப்மென்ட்' பீரியடில், முதல் திட்டத்தில் பல ஆயிரம் கோடி ரூபாய்களும், இரண்டாவது திட்டத்தில் பல ஆயிரம் கோடி ரூபாய்களும் செலவழிக்கிறோம். மூன்ருவது திட்டத்தில், 9,500 கோடி ரூபாய் செலவழிக்க உத்தேசித்திருக் கிறோம். சமுத்திரமெல்லாம் பாலாக ஓடும் இந்தச் சமயம் இந்த ஆசிரியர்கள், பூனை போல் நக்க வந்தால் விரட்டி அடிக்காமல், அவர் களுக்கும் உண்ண உணவு, உடுக்க உடை, தங்க இடம் இவைகளைக் கொடுக்க வேண்டியது சர்க்காரின் கடமை என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். ஆசிரியர்கள் கிளர்ச்சிகள் செய்யத் தயார் இல்லை. ஆனுலும், கிளர்ச்சி செய்தால்தான் சர்க்கார் ஏதாவது செய் வார்கள் என்ருல், அதனுல் ஆசிரியர்களுக்கும், பெற்ருேர்களுக்கும், மாணவர்களுக்கும் பெருத்த கேடு விளையும் என்ற காரணத்தினுல், சர்க்கார் அம்மாதிரியான நிலைமையைக் கொண்டுவரக் கூடாது என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI M. ETHIRAJALU: சேர்மன் அவர்களே, இப்பொழுது சபை முன்பு சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற வரவு செலவுத் திட்டத்தை முழுமனதுடன் ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்பு

கிறேன். இந்த வரவு செலவுத் திட்டத்தில், காங்கிரஸ் கட்சிக்கு எதிராக இயங்கக்கூடிய சக்திகளெல்லாம் எதிர்பார்த்தபடி, குறை கூறுவதற்கு ஒன்றும் இல்லையே என்று மனவேதனை அடைகிறார்கள். நமது அமைச்சரவை நல்ல முறையிலே, பரிசீலித்துத் தயாரித் திருக்கும் வரவு செலவுத் திட்டம் இது. நாட்டு மக்களுக்கும், கிராம மக்களுக்கும், விவசாயிகளுக்கும் வியாபாரிகளுக்கும், நன்மை பயக்கும் முறையில் இந்த பட்ஜெட்டைத் தயாரித்திருப் பதற்கு என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதிலும் குறிப்பாக நமது நிதியமைச்சரவர்கள், கடந்த எட்டு ஆண்டுகளாக ஒருவரே அந்தப் பணியை ஏற்றுக்கொண்டு, அவர் தம் சகாக்களையும் கலந்தாலோசித்து நல்ல முறையிலே தீட்டி யிருக்கும் இந்த வரவு செலவுத் திட்டத்திற்காக அவர்களுக்கு நம் நன்றியறிதலைத் தெரிவிக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த வரவு செலவுத் திட்டத்தில் வரவு 80 கோடியே 87 லக்ஷம் ரூபாய், செலவு 81 கோடியே 21 லக்ஷம் ரூபாய். ரூ. 34 லட்சம் துண்டு விழுந்த போதிலும், ஒரு பெரிய வரவு செலவுத் திட்டத்தில் சிறிய தொகை துண்டு விழுவது சகஜம்.

எவ்வளவு பெரிய லாபம் வந்தாலும் பொருட்படுத்தாது பொது மக்களும், வியாபாரிகளும் இருப்பதைப் பார்த்து வியாபாரிகள் முறையிட்டபடி அழுகும் பொருளான, மீன், முட்டை, இறைச்சி, வாழை இலை, காய்கறி சாமான்களுக்கு வரியை எடுத்தது மிக மிகப் பாராட்டத்தக்கது. எந்த விதமான வரியையும் அரசாங்கம் போடாவிட்டாலும், நமது இராச்சிய வருமானம் சென்ற வருடத்தைவிட இந்த வருடம் உயர்ந்திருக்கிறது. சென்ற வருடம் 851 லக்ஷமாக இருந்தது இந்த வருடம் 1,680 லக்ஷமாக உயர்ந்ததைப் பார்க்கும்போது 12 சதவிகிதத்திலிருந்து 19 சத விகிதமாக உயர்ந்திருக்கிறது.

4 p.m. அடுத்தபடியாகப் பார்க்கும்போது, நமது இராச்சியத்தில் பங்குத் தொகை போடுகின்ற வகையிலும், கடன் கொடுக்கும் வகையிலும் நமது சர்க்கார் 2,112 லட்சம் ரூபாயை மூலதனமாகக் கொடுத்திருக்கிறது. இந்த மூலதனம் அடுத்த வருஷத்திலே வருவாய் 2,680 லட்சம் ரூபாயாக உயருமென்று வரவு செலவுத் திட்டத்திலே குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கும்போது, நாம் மகிழ்ச்சி அடைகிறோம். அதற்கு அடுத்தபடியாக, நமது சபைத் தலைவர் ஏற்றுக்கொண்டிருக்கிற ட்ரான்ஸ்போர்ட் டிபார்ட் மெண்டிலே இந்த வருஷத்திலே வருவாய் 1 கோடி 84 லட்சம். செலவு 1 கோடி 72 லட்சம். இதிலே 12 லட்சம் ரூபாய்க்கு மேல் நிகர மிச்சமாகப் பார்க்கும்போது பல்வேறு துறைகளிலும் நமது இராச்சியம் முற்போக்கான நிலையிலே போய்க்கொண்டிருப்பதை யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்த வரவு செலவுத் திட்டம் கிராம முன்னேற்ற அடிப்படையிலே வகுக்கப்பட்டிருக் கிறது என்பதைப் பார்க்கும்போது, மகிழ்ச்சி அடைய வேண்டி யிருக்கிறது. இந்த மாநிலத்தை 360 அபிவிருத்தி வட்டாரங் களாகப் பிரித்திருக்கிறார்கள். இதுவரை 170 வட்டாரங்களாக

இயங்கியதை இந்த வருஷம் முடிவதற்குள் 211 வட்டாரங்களாக மாறுமென்றும் 1960-61-ல் மேலும் 32 வட்டாரங்கள் ஏற்படு மென்றும் திட்டவட்டமாகக் குறிப்பிட்டிருக்கிறது. நமது இராச்சி யத்தில் 18,000 கிராமங்கள் இருக்கின்றன. இந்தக் கிராமங்களில் அபிவிருத்தித் திட்டத்தின் மூலமாக இதுவரை 10,500 கிராமங்கள் பலன் அடைந்திருப்பதைப் பார்க்கும்போது, கிராம அடிப் படையில் இந்த வரவு செலவுத் திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அதே நேரத்திலே கிராமத் திலே இருப்பவர்களுக்கு, 85 சதவிகித கிராமங்களில் 35 சதவிகித கிராம மக்கள் பலன் அடைய வேண்டுமென்ற முறையில் இந்த நடப்பு ஆண்டில் 19 கோடி ரூபாய் கூட்டுறவு சொஸைட்டி மூலம் அவர்களுக்குக் கடனைக் கொடுக்க வேண்டுமென்றும், அடுத்த ஆண்டிலே 22 கோடி ரூபாய் கொடுக்க வேண்டுமென்றும் குறிப் பிடப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல. கிராமங்களிலே இருக்கும் விவசாயிகளில் ஓரளவு சொத்து இருப்பவர்களுக்குத்தான் கூட்டுறவு சொஸைட்டி மூலமாக இன்று வரை கடன் கொடுக்கப் பட்டு வந்தது. ஆனால் இந்த வருஷத்திலே சொத்து இல்லாமல் இருக்கக்கூடிய விவசாயிகளுக்கும், ஓரளவு குத்தகைக்காக நிலத்தை ஏற்றுக்கொண்டு பயிரிடுபவர்களுக்கும்கூட கடன் கொடுக்க அரசாங்கம் முன்வந்திருக்கிறது. கிராம மக்களுக்கு நல்ல ரோடு வசதி, குடிநீர் வசதி, கிராமங்களுக்கு டாக்டர் கட்டாயம் சென்று வேலை செய்வதற்கு வேண்டிய சம்பள வசதிகளை யெல்லாம் இந்த வரவு செலவுத் திட்டத்தில் குறிப்பிட்டிருப்பதைச் சற்று உற்று நோக்கிப் பார்க்கும்போது, இந்த அரசாங்கம் கிராம மக்கள் முன்னேற்றத்திற்காகவே இன்றைக்கு உழைத்து வருகிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்த அரசாங்கம் கிராமங்களைச் சீர்படுத்துவதற்காகவே நடைபெற்று வருகிறது என்பது இந்த ஆண்டு பட்ஜெட் பிரசங்கத்திலிருந்து தெளிவாக விளங்குகிறது. இந்த வகையில் இந்த சர்க்காரானது மக்களுக்கு வேண்டிய எல்லா வித நன்மைகளையும் செய்துகொண்டிருக்கின்ற நேரத்தில் இந்த நாட்டிலே எதிர்க் கட்சி என்ற ஒன்று இருக்கவே முடியாது. அப்படி இருந்தாலும் நன்மை செய்யக்கூடிய ஒரு கட்சியை எதிர்க்கக்கூடிய ஒரு கட்சியாகத்தான் இருக்க முடியும்.

நம்முடைய நாட்டிலே இன்றையதினம் விவசாயத்தைப் பெருக்கினால்தான் பொருளாதார வளர்ச்சி ஏற்படும். விவசாய வளர்ச்சி ஏற்பட்டால்தான், தொழில் வளர்ச்சி ஏற்பட முடியும். குறிப்பாக, நம்முடைய நாட்டில் 100-க்கு 70 சதவிகிதம் மக்கள் விவசாயத்திலேதான் ஈடுபட்டிருக்கிறார்கள். இன்றையதினம் விவசாயம் பெருக வேண்டுமென்பதற்காக நமது அரசாங்கம் விவசாயிகளுக்குப் பல்வேறு உதவிகளைச் செய்து வருகிறது. இரண்டாவது திட்டத்தில் 12 லட்சம் டன் அரிசியை உற்பத்தி செய்ய முடியும் என்று திட்டமிட்டிருந்தோம். ஆனால், தகுந்த அளவுக்குப் போதுமான ரசாயன உரம் கிடைக்காத காரணத் தினால், விவசாயிகளுக்குக் குறைவான அளவுக்கே ரசாயன உரம் கொடுக்க முடிந்ததாலும், நாம் திட்டமிட்டபடி 12 லட்சம் டன்

உற்பத்தி செய்ய முடியாமல் 9 லட்சம் டன் அரிசியைத்தான் உற்பத்தி செய்ய முடியும் என்றும் அரசாங்கம் எதிர்பார்க்கிறது. இதைப்பற்றி நான் ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். ரசாயன உரம் குறைவான அளவில் கிடைக்கும்போது, ஏன் தனிப்பட்டவர் களுக்கு இந்த ரசாயன உர விநியோகத்தைக் கொடுக்கவேண்டு மென்று கேட்க விரும்புகிறேன். தனிப்பட்டவர்களுக்குக் கொடுக்கும் காரணத்தினால் அவர்கள் ஏதோ ஓரளவுக்கு விவசாயி களுக்குக் கொடுத்துவிட்டு மீதி மூட்டைகளைப் பல்வேறு இடங் களுக்கு அதிக விலைக்கு விற்க அனுப்பிவிடுகிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : உர விநியோகத்தைச் சர்க்கார் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகச் செய்வது என்று முடிவாகிவிட்டது.

* SRI M. ETHIRAJALU : அதை நான் வரவேற்கிறேன். கூட்டுறவு சொசைடிகளுக்குக் கொடுப்பதோடு மட்டுமல்ல ; சென்னையிலுள்ள டி.யு.சி.எஸ். மூலமாகக்கூட இந்த உரத்தை விவசாயிகளுக்கு வழங்க முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். (ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் : அதனால் ப்ளாக் மாக்கெட்டுக்கு நல்ல வசதி ஏற்படும்.) ஒருவன் ரகசியமாக விற்பதைக் கண்டுபிடிக்க முடியாது. கூட்டுறவு ஸ்தாபனங்களில் ஏற்படும் பிளாக் மார்க்கெட் வெளிவந்துவிடும். சுலபமாகக் கண்டுபிடிக்கலாம்.

விலைவாசி உயர்வைப்பற்றிச் சொல்லும்போது, அந்த விலை உயர்வைக் கட்டுப்படுத்துவதற்காக நமது மத்திய சர்க்கார் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது, நம்முடைய அரசாங் கமும் நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறது என்று அமைச்சர் சொல்லியிருக்கிறார்கள். இம்மாதிரி "நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ; எடுத்துக்கொண்டிருக்கிறோம்" என்று சொல்லிக்கொண்டிருப்பதில் மட்டிலும் பிரயோஜனம் இல்லை. இதிலே அகப்பட்டுக்கொண்டு விழிப்பவர்கள் கஷ்டப்படுபவர்கள் நடுத்தர மக்களும், தொழிலாளர்களுமேயாகும். இந்த நடுத்தர மக்களுக்கும், தொழிலாளர்களுக்கும் அத்தியாவசியமாகத் தேவைப்படுகிற பொருள்கள் வரையிலாவது அவர்களைப் பாதிக் காத அளவில் விலையை நிர்ணயிக்க வேண்டும். அரிசி, பருப்பு, மிளகாய், விறகு, மண்ணெண்ணை போன்ற முக்கிய சாமான்களின் விலை ஏறிக்கொண்டே போகிறது. மற்றவைபற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. இந்தச் சாமான்களின் விலையைக் கட்டுப் படுத்துவதற்கு ஒரு நிரந்தரமான திட்டம் தயாரிக்க வேண்டும். அந்தந்த மாவட்டக் கலெக்டர்களுக்குத் தெரியாமல் அரிசி விலையோ, பருப்பு விலையோ, மிளகாய் விலையோ, எண்ணெய், விறகு போன்றவைகளின் விலையோ எந்தவிதமான காரணத்தினாலும், உயர்வதற்கு வழி இருக்கக்கூடாது என்று அரசாங்கம் நிர்ணயிக்க வேண்டும். அப்படி உயர்ந்தால் அந்தந்த மாவட்டக் கலெக்டர் தான் பொறுப்பாளியென்று வரையறுக்க வேண்டும்.

21st March 1960] [Sri M. Ethirajalu]

மோட்டாரைப்பற்றி இந்த மன்றத்திலே ஒருவருக்கு எத்தனை மோட்டார்களுக்குப் பர்மிட் கொடுப்பது என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்று கேள்விகள் கேட்டார்கள். நான் அரசாங் கத்திற்கு ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். இன்றையதினம் ஒருவருக்கு ஒன்று அல்லது இரண்டு மோட்டார் இருந்தால்கூட நல்ல உச்ச நிலைமைக்கு வர முடிகிறது. இந்த நிலைமையில் அரசாங்கத்துக்கும் நல்ல வருமானம் மேலும் வர வேண்டுமென் றும், இந்த மோட்டாருக்காகக் கொடுக்கப்படுகிற பர்மிட்டை "ஆக்ஷன்" விட வேண்டுமென்று கூற விரும்புகிறேன். ஒரு முறை பர்மிட் கொடுத்தால் 5 வருஷத்திற்குத்தான் செல்லுபடி யாகும் என்று வரையறுக்கவேண்டும். அடுத்தாற்போல் ஆக்ஷன் வரும் பர்மிட்டுக்கு அதிகப் பணத்திற்கு யார் கேட்கிறார்களோ அவர்களுக்கு விட்டுவிடலாம். இம்மாதிரிச் செய்தால் எல்லோ ருக்கும் பரவலாகக் கிடைக்கும்; வருவாயும் ஏற்படும். இல்லா விட்டால், ஒருவரிடமே 5 பஸ்கள், 10 பஸ்கள் என்று சேர்ந்துவிடு கின்றன. சோஷலிஸ்ட் பேட்டர்ன் சர்க்கார் வர வேண்டுமென்று நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். ஒரே இடத்தில் பணமும் குவியக் கூடாது. ஆகவே, இந்த பஸ் பர்மிட்டை "ஆக்ஷனிலே" விட்டால், எல்லோருக்கும் கிடைக்க வழி ஏற்படும்.

அடுத்தபடியாக, பஸ்களில் பிரயாணம் செய்ய விரும்பும் பொதுமக்கள் எல்லோரும் மோட்டாரை நம்பித்தான் ஒரு ஊரி லிருந்து மற்றொரு ஊருக்குப் போகவேண்டியிருக்கிறது. (குறுக்கீடு:—ரயில் போக்குவரத்தும் இருக்கிறது.) எல்லோரும் அதிலும் பஸ் ஓட்டும் டிரைவரை நம்பித்தான் போக வேண்டி யிருக்கிறது. அப்படிப் போகும் காலத்தில் திடீரென ஆபத்து ஏற்படுகிறது. அப்படி ஆபத்து நேரிடும்போது உயிரிழக்கவும் நேரிடுகிறது. அப்படி உயிர் இழந்துவிட்டால், குடும்பமே பாதிக் கப்படுவதையொட்டி அரசாங்கமே மோட்டார் இன்ஷூரன்ஸைத் தன் வசம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கூற விரும்புகிறேன். பஸ்கள், லாரிகள் இன்ஷூரன்ஸை அரசாங்கமே தன் கையில் வைத்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் இறந்துபோனவ ருடைய குடும்பத்திற்கு ஏதாவது சகாய நிதி உதவ முடியும். இப்போது இருக்கக்கூடிய நிலையில் இறந்துபோனவருக்காக அவர் குடும்பத்தைப் பாதுகாக்கக் கோர்ட்டில் வியாஜ்யம் செய்து கொண்டிருக்கும் நிலைமை இருந்துவருகிறது. ஆகவே, அரசாங் கத்தின் கையில் இன்ஷூரன்ஸ் இருந்தால், உடனுக்குடன் நல்ல முறையில் இறந்து போனவர்களின் குடும்பத்துக்கு உதவி செய்ய முடியும்.

அடுத்தபடியாக, வர வர ஜனப் பெருக்கம் அதிகமாகிக் கொண்டே போகிறது. சென்னையிலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் பார்த்தால், எத்தனையோ குடும்பங்கள் வசிக்கின்றன. அப்படி வசிப்பவர்களுக்கு ஏதாவது வசதி இருக்கிறதா? தேவையான இடம் இருக்கிறதா? இதையெல்லாம் அரசாங்கம் பார்க்க வேண்டும். சுகாதாரத்துடன் அந்த வீடுகள் எல்லாம் கட்டப் பட்டிருக்கின்றனவா என்று அரசாங்கம் கவனிக்க வேண்டும். மண்ணடியில் தெருக்களில் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் வாழ்

[Sri M. Ethirajalu] [21st March 1960

கின்றன. வீதிகளில் படுத்துக்கொண்டிருக்கிறார்கள். இவர்களைக் குடும்பமாக வைப்பதற்குத் தாம்பரம் பக்கத்தில் விஸ்தாரமாக இருக்கும் இடத்தில் ஏன் குடியேற்றக்கூடாது? ஜன நெருக்கடியைக் குறைக்க அரசாங்கம் நல்ல முயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கூற ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, குடும்பக் கட்டுப்பாட்டைப்பற்றிச் சொல்லப் 4-10 p.m. பட்டிருக்கிறது. குடும்பக் கட்டுப்பாடுபற்றிப் பிரசாரம் செய்வதற்காக நல்ல நர்சுகளையெல்லாம் உபயோகப்படுத்துகிறார்கள். நர்சுகள் வைத்திய வசதிக்கே போதுமான எண்ணிக்கையில் இல்லாதபோது, நான்கு வருஷம் நர்சுக்கான பயிற்சி பெற்றவர்களைக் குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரம் செய்ய ஏன் அனுப்ப வேண்டும்? நர்சுகளை அனுப்புவதற்குப் பதிலாக, முப்பது நாற்பது வயதுள்ள நல்ல குடும்பத்தில் வாழ்க்கையில் அனுபவம் பெற்றவர்களுக்கு ஏதாவது தகுந்த பயிற்சி கொடுத்து, அவர்களை இத்தகைய கட்டுப்பாட்டுப் பிரசாரத்திற்கு அனுப்பினால் மிகவும் நன்றாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். வீடு வீடாகப் பிரசாரம் செய்யப் போகிறவர்கள் கூட, இதற்கென்று ஒரு சமய சந்தர்ப்பம் பார்த்துப் போக வேண்டும். பிரசாரத்திற்கென்று வீடுகளுக்குப் போகும்போது, அங்கே எத்தனை பேர்கள் இருந்தாலும், பொருட்படுத்தாமல் அவர்கள் எதிரில் போய் வந்த விஷயத்தைப்பற்றிப் பிரசாரம் செய்ய ஆரம்பித்துவிடுகிறார்கள். இதனால், வீட்டிலுள்ளவர்கள் இதைப்பற்றிப் பேசவே சங்கோஜப்படுகிறார்கள். இதனால் எதிர்பார்க்கும் பலன் ஏற்படாமல் போகிறது. மற்றவர்கள் இல்லாத சமயத்தில், குறிப்பிட்டவர்களைத் தனியாகக் கூப்பிட்டு, இதைப்பற்றிச் சொல்லிக்கொடுப்பதற்கு அரசாங்கம் தகுந்த வழிமுறைகளை வகுத்தாக வேண்டுமென்று தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

அடுத்து, கால்நடைகளைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சென்னையிலே பால் பண்ணையொன்றை மாதவரத்தில் வைத்திருக்கிறோம். பால் பண்ணையிலே தினம் ஒன்று 5,100 பவுண்டு பால் கிடைப்பதாகச் சொல்லப்படுகிறது. நாம் அந்தப் பாலைச் சென்னையில் இருக்கும் 20 லட்சம் மக்களுக்கும் நன்றாகக் கிடைக்கும்படி செய்வதுதான் நமது அரசாங்கத்தின் முக்கியமான நோக்கமாக இருக்கவேண்டும். அப்படிக் கிடைப்பதற்கு என்ன வழிகள் என்பதை நாம் நன்றாக ஆராய்ந்து பார்க்க வேண்டும். அமைச்சர் அவர்கள் சொன்னதுபோல், கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவும் டி.யு.ஸி.எஸ். மூலமாகவும் பாலைக் கொடுப்பதற்கு நாம் முன்வரவேண்டும். இப்போது இருக்கிற திட்டப்படி எல்லோருக்கும் பால் கிடைக்கவில்லை.

அதோடு கூட, பசுவையும் எருமையையும் நகரத்தில் வைத்துக் கொண்டிருப்பவர்கள் அவைகளைக் கண்ட இடங்களில் எல்லாம் கட்டி வைக்கிறார்கள். வீட்டுக்கு முன்னால் எருமைகளையும் பசுக்களையும் கட்டி வைக்கிறார்கள் என்றால், அதனால் எவ்வளவு சுகாதாரக் கேடு ஏற்படுகிறது என்பதையும் நாம் பார்க்கவேண்டும். எவ்வளவு அசுத்தம் ஏற்படுகிறது? ஏன் அரசாங்கம் அந்தந்தத் தெருவிலே கூடுமானவரை மாட்டுத் தொழுவங்கள் கட்டி, மாட்டை

21st March 1960] [Sri M. Ethirajalu]

அங்கே கட்டும்படி செய்து, குறைந்த வாடகை வசூலிக்கக் கூடாது? அப்படி வசூல் செய்தால் வருமானமும் கிடைக்கும். தெருக்கள் சுத்தமாகவும் இருக்கும். கால்நடைகளுக்கும் நாம் வசதி செய்து கொடுத்ததாகும். சில சமயங்களில் கால்நடைகளுக்குக் கோமாரி என்னும் வியாதி வந்துவிடுகிறது. அப்படி வரும்போது அவைகளுக்கு ஊசி போட வேண்டுமென்ருல், வாக்ஸின் காட்பாடியிலிருந்து வரவேண்டியிருக்கிறது. அந்த வாக்ஸின் வருவதற்குள் நோய் வந்த மாடும் இறந்துவிடுகிறது. இந்த நிலையை நாம் வளரவிடக்கூடாது. வாக்ஸின் இல்லாததால் 'இரண்டு நாள் கழித்து வாருங்கள்' என்று சொல்லக்கூடிய நிலை இருக்கிறது. ஆகவே, ஒவ்வொரு ஜில்லா ஆஸ்பத்திரியிலும், தாலூகா ஆஸ்பத்திரியிலும் தேவையான வாக்ஸின்களை வைத்து, உடனடியாகக் கால்நடைகளை அங்கே கொண்டுபோய் ஊசி போட்டுக்கொள்ளும்படியான நடவடிக்கையை ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது என்று கேட்கிறேன். அதை உடனடியாகச் செய்யவேண்டும். அப்படிப்பட்ட ஏற்பாடு இல்லாததினுல், எத்தனையோ கால்நடைகள் இறந்துபோய்விட நேரிடுகின்றன. இதையும் அரசாங்கம் கவனிக்க வேண்டும்.

பின்தங்கிய இனத்தவர்களுக்குச் சென்ற ஆண்டு 234 லட்ச ரூபாய் பணம் ஒதுக்கப்பட்டிருந்தது. இந்த ஆண்டு 295 லட்ச ரூபாய் வரையில் நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கியிருக்கிருர்கள். அதற்காக அவர்களுக்கு என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன். இருநூற்று தொன்ணுத்தைந்து லட்ச ரூபாயும் உண்மையிலேயே மிகப் பின்தங்கிய சமுதாய மக்களுக்குப் போகின்றனவா என்று நாம் பார்க்க வேண்டும். இதற்கு என்ன வழி செய்ய வேண்டும்? ஏன் அவர்களுக்குக் கிடைக்கவில்லை? ஒரு சில முன்னேற்றமாக உள்ள சமூகத்திற்கும், நல்ல வசதி உடையவர்களுக்கும் தான் 50 சத விகிதத்திற்கு மேல் போய்க்கொண்டிருக்கிறது என்பதை நான் சொல்லாமல் இருக்க முடியவில்லை. இதற்கு என்ன வழி என்று கண்டுபிடிக்கவேண்டும். உண்மையிலேயே சமுதாயத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சரியான முறையில் சலுகைகள் போய்ச் சேருகின்றனவா என்று கண்டுபிடிக்க அதற்கென்று ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும். அந்தக் கமிட்டியின் சிபார்சின் பேரில்தான் இனி உபகாரச் சம்பளம் வழங்க வேண்டும். தாசில்தாரிடம் சென்ருல் உடனடியாக விசாரணையின்றி கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிடுகிருர். இப்படி எல்லோரும் பொய்யாகவே சர்டிபிகேட் வாங்கும் காரணத்தால், ஏழைகளுக்குச் சலுகை கிடைக்கவில்லை. உண்மையிலேயே பின்தங்கியவர்களுக்காக ஏற்பட்ட சலுகைகள் சரியாகப் போய்ச்சேராமல் இருக்கிறது. இதை அரசாங்கம் கமிட்டி போட்டு நன்ருக அலசிப் பார்த்து, யார் பின்தங்கியவர்களோ அவர்களுக்கு இந்தச் சலுகைகள் போக வழி செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, எல்லோருக்கும் இலவசக் கல்வி கொடுக்க வேண்டுமென்று அரசியல் சட்டத்திலே குறிப்பிட்டிருந்தாலும், அரசாங்கம் பல்வேறு சூழ்நிலை காரணமாகக் கட்டாய

[Sri M. Ethirajalu] [21st March 1960

இலவசக் கல்வி கொடுக்க முடியவில்லை. அதற்காகப் பள்ளிகளி லுள்ள பிள்ளைகளுக்கு நாம் மத்திய உணவு கொடுக்கும் திட்டத்தைப் புதிதாகக் கொண்டுவந்திருப்பதன் மூலம் ஓரளவு கல்வி வசதி ஏற்படுகிறது வாஸ்தவந்தான். மறை முகமாக ஓரளவுக்குக் கல்வி வசதி இதன் மூலம் ஏற்படுகிறது. சமுதாயத்தில் எல்லோருக்கும் அரசியல் சட்டப்படி கட்டாய இலவசக் கல்வி கொடுக்க முடியாவிட்டாலுங் கூட, சமுதாயத்தில் மிகப் பின்தங்கிய இனத்தவர்களுக்காவது இந்தச் சலுகையை ஏன் கொடுக்கக்கூடாது என்று கேட்கிறேன். சில பின்தங்கிய இனத்தவர்களில் இன்றுவரை படித்தவர்களே இல்லாத சமுதாயங் கள் இருக்கின்றன. அந்தச் சமூகத்தவருக்காவது கட்டாய இலவசக் கல்வியை ஏன் கொடுக்கக்கூடாது? ஹரிஜனங்களுக் காக ஏராளமான செலவு செய்வதுபோல் செலவு செய்கின்றோம். ஏன் பரீட்சார்த்தமாகக்கூட ஹரிஜனங்களுக்காவது கட்டாய இலவசக் கல்வி கொடுக்கக் கூடாது? அதுபோல் மீனவர்களுடைய குழந்தைகளுக்கும் கட்டாய இலவசக் கல்வி கொடுக்கலாம். அடிப்படையிலே மிகவும் பாதிக்கப்பட்ட சமூகத்தவர்களுக்கு உடனடியாகக் கட்டாய இலவசக் கல்வி கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

கப்பல் கட்டும் தொழிற்சாலையொன்றைக் கேரள இராச்சியத் தில் வைக்கப் போவதாகச் சமீபத்தில் படித்தேன். அதேபோல, தமிழ் நாட்டில் பரங்கிப்பேட்டை போன்ற இடங்களில் கப்பல் கட்ட விசாலமான இடம் இருக்கிறது என்று கப்பல் கட்டும் துறைமுகக் கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. பரங்கிப்பேட்டை என்பது சிதம்பரத்திற்கு அருகாமையில் உள்ளது. போர்ட்டோ நோவோ என்று ஆங்கிலத்தில் சொல்வதுண்டு. அங்கே நல்ல விசாலமான கப்பல் கட்ட இடம் இருக்கிறது. 1825-ம் ஆண்டில் போர்ச்சுகீசியர் முதன் முதலில் இந்த இடத்தைக் கைப்பற்றி, இந்த இடத்திலேதான் அவர்கள் சேலத்திலேயிருந்து கொண்டு வந்த இரும்புக் கனிகளைக் கொண்டு இரும்பு காய்ச்சினர்கள் என்று சரித்திரம் கூறுகிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்கெல்லாம் ஆதாரம் எங்கே என்று தெரியவில்லை எங்களுக்கு.

* SRI M. ETHIRAJALU : நான் ஆதாரம் கொடுக்கிறேன். Even to-morrow I can submit my report. அமைச்சர் அவர்கள் இதைக் கவனத்தில் வைத்துக்கொண்டு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது பரங்கிப்பேட்டையில் கப்பல் கட்டும் தளம் ஒன்றை அமைக்கும் திட்டத்தைச் சேர்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மூன்றாவது திட்டத்தில் சேர்த்துக் கொள்ள யோசனை இருக்கிறது என்று நான் மட்டும் சொல்ல வில்லை. காக்பூர் என்னும் இடத்தில் கூடிய கமிட்டிகூட தென் னாட்டில் இரண்டு கப்பல் கட்டும் தளங்கள் ஏற்படுத்த வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறார்கள். அதன்படிதான் நானும்

21st March 1960] [Sri M. Ethirajalu]

சொல்கிறேன். இந்தத் துறைமுகத்தில் 200 ஏக்கர் அளவில் விசாலமான இடம் இருக்கிறது. அங்கே கரையில் முப்பது அடி ஆழத்தில் களி மண் இருக்கிறது. அலேயும் நுரையும் கப்பல் கட்டுவதற்குச் சாதகமாக இருக்கிறதென்று சொல்கிறார்கள். அடுத்தாற்போல் 2 மைல் தூரத்தில் வெள்ளாறு கடலோடு கலக்கிறது. வெள்ளாற்றின் பக்கத்தில் பரங்கிப்பேட்டை ரயில்வே நிலேயம் இருக்கிறது. பஸ் போக்குவரத்தும் இருக்கிறது. அதற்கடுத்தாற்போல் நெய்வேலியும் இருக்கிறது. இப்படிப் பல இயற்கை வசதிகள் உண்மையிலேயே அமைந்திருக்கும் ஒரு இடத்தில் கப்பல் கட்டும் தளம் அமையக்கூடிய வாய்ப்பு இருக்கும்போது, இதை அரசாங்கம் பரிசிலித்துப் பார்த்து, ஏன் மத்திய அரசாங்கத்திற்குத் தெரிவிக்கவில்லே என்று கேட்கின்றேன். மத்திய அரசாங்கத்திலே நிதி அமைச்சராக இருந்த திரு. ஸி. டி. தேஷ்முக் அவர்கள் அந்த இடத்திற்கு வந்து பார்த்து, 'இது நல்ல இடம்' என்று சொல்லியிருக்கிறார். ஜெர்மானிய மந்திரி ஒருவர் அங்கு வந்து கப்பல் கட்டப் பொருத்தமான இடம் என்றும், இம்மாதிரியான இடம் கிடைத்தால் ஜெர்மானியர் கூட வந்துவிடுவார்கள் என்றும் தெரிவித்திருக்கிறார். இப்பேர்க்கொத்த இடத்தை அரசாங்கம் கவனியாது இருப்பதைப் பற்றி நான் உண்மையிலேயே வியப்பு அடைகிறேன். ஆகவே, நிச்சயமாக நம்முடைய சபைத் தலேவர் அவர்கள் இந்தத் தகவலே வைத்துக்கொண்டு, இதற்கு வேண்டிய ஏற்பாடுகளேச் செய்ய வேண்டும். மூன்றுவது திட்டத்தில் சேர்த்துக்கொள்ளும்படி மத்திய அரசாங்கத்திற்கு நம்முடைய அரசாங்கம் சொல்லியாக வேண்டும். அவர்கள் சேர்த்துக்கொண்டால் சேர்த்துக்கொள்ளட்டும்; இல்லாவிட்டால் மேலும் மேலும் நாம் வற்புறுத்த வேண்டும். இது மிக மிக முக்கியம். இதற்கு வேண்டிய முக்கிய தஸ்தாவேஜுகளும் நான் தருகிறேன்.

டிராக்டர்களேப்பற்றிப் பட்ஜெட்டில் ஒரு குறிப்பும் காணப்படவில்லே. மூன்று வருஷங்களாக ட்ராக்டர்களே வாங்கப்படவில்லே என்றுதான் தெரிகிறது. பட்ஜெட்டைப் புரட்டிப் புரட்டிப் பார்க்கும்போது, விவசாயத்திலே முக்கிய பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நமது சர்க்கார் சொல்லிவரும்போது, ஏன் ட்ராக்டர்கள் வாங்கவில்லே என்று கேட்கிறேன். ட்ராக்டர்களுக்குப் பணம் எங்கே ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று கேட்கிறேன். ட்ராக்டர்களுக்கு வேண்டிய பாகங்கள் கிடைக்காததால், ட்ராக்டர்கள் வேலே செய்யாமல் ஆங்காங்கு சும்மாவே இருக்கின்றன. இந்த நிலேமை இன்னும் நீடித்துக்கொண்டிருக்கிறது. ஜில்லாவிற்கு மூன்று ட்ராக்டர்கள், நான்கு ட்ராக்டர்கள் இருந்தும் விவசாயிகளுக்குப் பயன்படுவதில்லே. இங்கிலாந்திலிருந்தோ, அமெரிக்காவிலிருந்தோ தேவையான அன்னியச் செலாவணி கிடைக்காததால் டிராக்டர் வாங்க முடியவில்லே. உண்மை. ஆனுல் ரஷ்யா போன்ற இடங்களிலிருந்து 5,000 6,000 ரூபாய் விலேயில் கிடைக்கும் ட்ராக்டர்களே வாங்கி ஏழை விவசாயிகளுக்குப் பயன்படும் வகையில் உபயோகப்படுத்தக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, நான் சொல்ல விரும்புவது, சட்ட சபை அங்கத்தினர்கள் செக்ரடேரியட்டுக்கு வரும்போதும், சபை கூடுகிற நேரத்தில் வந்தாலும், மற்ற நேரத்தில் வந்தாலும், அவர்களுக்குப் போதுமான இடவசதி இல்லையென்பதை நான் சபைத்தலைவர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். இந்த இட
4–20 p.m. வசதியைச் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இது கனம் சேர்மன் அவர்களுக்கும் தெரிந்த விஷயம், எங்கள் குறை பெரிய குறை. இப்பொழுது ஏதோ டெபுடி சேர்மன் அவர்கள் தங்கள் ரூமில் இடம் கொடுத்தாலும், எங்களுக்கு உண்மையிலேயே தனியான இடம் இல்லை. ஒரு சமயம் அவர்கள் கொடுக்க முடியாவிட்டால், ரொம்பக் கஷ்டமாகப் போய்விடும். ஆகவே, இந்த வசதியையும் செய்துகொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்த பட்ஜெட்டை ஆதரித்து என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri S. K. SAMBANDAN :** தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையை, வரியில்லாமல் சமர்ப்பித்ததற்காக அரசாங்கத்தைப் பாராட்டி என் உரையைத் தொடங்குகிறேன். ஏனென்றால், பட்ஜெட் என்றாலே, எந்த வரி விதிக்கப்படுமோ என்ற பயம்தான் இருக்கிறது. ஆகவே, ஒரு புது வரியும் இல்லாமல் போட்டிருப்பதற்காக, அரசாங்கத்தைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். ஒரு சில பண்டங்களுக்கு வரி விலக்கு அளித்திருப்பதற்காகவும் நிதி அமைச்சரவர்களைப் பாராட்டுகிறேன். இருந்தபோதிலும், இதிலும் ஏமாற்றத்தை அளிக்கும் நிமித்தம் ஏற்பட்டிருக்கிறது. முக்கியமாக, விலைவாசிகள் நிர்ணயம் செய்யப்படவில்லை. பல மாதங்களாக எதிர்பார்த்திருந்த, என்.ஜி.ஓ.-க்களின், உபாத்தியாயர்களின் சம்பள உயர்வு ஒன்றும் தெரிவிக்கப்படவில்லை. அது அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தை அளித்திருக்கிறது. பட்டம் பெற்ற லட்சக்கணக்கானவர்களுக்கு இடையேயுள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க ஒரு திட்டமும் காணப்படாதது ஏமாற்றத்தை அளித்திருக்கிறது. மற்றப்படி, பல துறைகளில் நாம் முன்னேறி வந்தபோதிலும், அந்தத் துறைகளிலும் குறைகள் பல இருந்துகொண்டே இருக்கின்றன. உண்மையாக விவசாயத்தில் முன்னேற்றம் இருக்கிறது என்றாலும், அரிசியின் விலை ஏறிக்கொண்டேயிருந்து மக்களுக்கு எந்த அளவிலும் பரிகாரம் கொடுக்கவில்லை. விவசாயிகளுக்கும் தொல்லைகள் இருக்கின்றன. ரசாயன உரத்தைப்பற்றி எல்லோரும் குறிப்பிட்டார்கள். ரசாயன உரம் வேண்டிய அளவுக்கு, வேண்டிய நேரத்தில் விவசாயிகளுக்குக் கிடைப்பதில்லை. ஆகவே, அவர்களுக்குத் தேவைப்படும் நேரத்தில் சரியான முறையில் வினியோகம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். உரம் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் வினியோகிக்கப்பட்டாலும், மத்திய சர்க்காரிடம் வற்புறுத்தி அதிகமாக வாங்கிப் பயிரிடும் காலத்தில், விதைக்கும் காலத்தில், அவர்களுக்குத் தக்க அளவிலே, குறைந்த விலையிலே கிடைக்கச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

21st March 1960] [Sri S. K. Sambandhan]

விவசாயத் துறையிலே கரும்பு உற்பத்திக்காகத் திட்டமிட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். உற்பத்திக்காகவும், ஆராய்ச்சிக்காகவும், ஆராய்ச்சி நிலையங்கள் இருந்தபோதிலும், மத்திய சர்க்கார் சர்க்கரை ஆலைகள் மீது விதிக்கும் தொகையைப்பற்றி இந்த அறிக்கையில் ஒன்றும் இல்லை. நம் இராச்சியத்திலிருந்து பல லட்சக்கணக்கான ரூபாய்கள் கிடைக்கின்றன. அந்தப் பணம் எந்த வழியில் செலவழிக்கப்படுகிறது என்ற குறிப்பு இந்த அறிக்கையில் இல்லை. அந்தப் பணத்தை மத்திய சர்க்காரும், நம் சர்க்காரும் சேர்ந்து செலவழிக்கவேண்டும் என்று இருந்தாலும், நாம் மத்திய சர்க்காரிடம் சொல்லி, அந்தப் பணம் எதற்காக வசூலிக்கப்படுகிறதோ, அந்தத் துறையில் அதிகமாகச் செலவழிக்கச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த வகையில் கரும்பு உற்பத்திக்கு ஆவன செய்யவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

பல துறைகளிலும் முன்னேறிக்கொண்டிருந்தபோதிலும், எல்லாவற்றிலும் குறைகள் இருந்துகொண்டேதான் இருக்கின்றன. சமுதாய நலத் திட்டத்தில் பல லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவிடுகிறோம். எல்லாமே மக்களின் நன்மைக்குப் போய்ச்சேருகிறதா என்று பார்த்தால், கணிசமான பங்கு விரயமாவதைத்தான் காண்கிறோம். 'எஸ்டாப்ளிஷ்மெண்டு' வகையில் அதிகமாகச் செலவாகி மக்களுக்குப் பயன்படுவது மிகக் குறைவாகத்தான் இருக்கிறது. சமுதாய நலத் திட்டங்களில் பாதிக்கு மேல் எஸ்டாப்ளிஷ்மெண்டுக்குப் போய்விடுகிறது. பாதி கூட மக்களுக்குப் பயன்படுவதில்லை. ஆகவே, வேறு ஒரு திட்டம் போட்டு, அல்லது இப்பொழுதிருக்கும் டிபார்ட்மெண்டுகளோடு அந்தத் திட்டங்களை இணைத்து மக்களுக்கு நேரிடையாக நன்மை பயக்கும் வகையில் திட்டம் வகுக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன். பல வழிகளிலும் பணம் விரயமாவதைப் பார்க்கிறோம். எங்கள் மாவட்டத்தில், ஒரு பாதை திட்டத்தின் கீழ் புதிதாகப் போடப்பட்டது. நான்கு, ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு அது போடப்பட்டது. அது ரயில்வே லைனைக் கடந்து போகவேண்டிய பாதை. இரண்டு பக்கத்திலும் போட்டிருப்பதை ரயில் பாதையைக் கடக்கச் செய்து சேர்க்க வேண்டும். ஆனால், அம்மாதிரிச் செய்வதற்கு, ரயில்வேயிலிருந்து அனுமதி கிடைக்கவில்லை. ஆகவே, அந்தப் பாதை போட்ட நிலையிலேயே இருக்கிறது. செலவழிக்கப்பட்ட தொகை வீணாகியிருக்கிறது. பாதை போட்டிருந்தாலும் 4, 5 ஆண்டுகளாக மக்களுக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. அது மக்களிடமிருந்து உதவி வாங்கிப் போட்ட பாதை. முன்கூட்டியே ரயில்வே அதிகாரிகளிடம் உத்தரவு வாங்கி இதைச் செய்திருக்கலாம். அப்படிச் செய்திருந்தால், இதுவரை அந்தப் பாதை மக்களுக்கு உபயோகப்பட்டிருக்கும். இதைச் சரிசெய்ய அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

இந்தப் புது பஞ்சாயத்து அமைப்பிலே, அவர்களுக்குச் சரியான அதிகாரங்கள் அளிக்கப்படவில்லை. பஞ்சாயத்திலிருந்து கவுன்சிலுக்கு அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்படும்

